بسم الله الرحمن الرحيم

## முன்னுரை

புகழ் அனைத்தும் அல்லாஹ்வுக்கே! அவனைப் போற்றுகிறோம், அவனிடத்தில் உதவி கோருகிறோம். அவனிடமே பாவமன்னிப்புக் கேட்கின்றோம். மேலும் நமக்கு ஏற்படவுள்ள அனைத்து தீங்குகளை விட்டும் நம் தீய செயல்களை விட்டும் அல்லாஹ்விடத்தில் பாதுகாப்புத் தேடுகின்றோம். அல்லாஹ் எவரை நேர் வழியில் செலுத்துகின்றானோ அவரை வழி கெடுப்பவர் யாரும் இல்லை. எவரை அவன் வழிகெடுத்துவிடுகிறானோ அவரை நேர்வழிப்படுத்துபவரும் இல்லை. இன்னும் வணக்கத்துக்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு யாதொரு இணையுமில்லை. முஹம்மத் நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும், திருத்தூதரும் ஆவார்கள் என நான் சாட்சி கூறுகிறேன். அல்லாஹ் அவர்கள் மீதும், அவரது குடுப்பத்தவர்கள், தோழர்கள், அவர்களைப் பின் தொடர்ந்த அனைவர் மீதும்

கியாமத்து நாள் வரை ஸலவாத்தும், அதிகமதிகம் ஸலாமும் சொரிந்தருள்வானாக!

இது ‘நோயாளியின் தொழுகை’ எனும் தலைப்பில் சுருக்கமாக எழுதப்பட்ட ஒரு நூலாகும். நான் இந்நூலில் நோய் எனும் வார்த்தையின் விளக்கம், அவர் பொறுமை கொள்வதன் அவசியம், அதன் சிறப்பு, அவர் கடைப்பிடிக்க வேண்டிய அவசியமான ஒழுக்கங்கள் பொன்ற விபரங்களைத் தெளிவு படுத்தியுள்ளேன். இன்னும் இஸ்லாமிய ஷரீஅத்தின் இலகுவான போக்கையும், அதன் தாராளத் தன்மையையும், நோயாளி சுத்தம் செய்யும் முறையையும் விரிவாகவும், அவரது தொழுகை முறையை சுருக்கமாகவும் தெளிவாகவும் கூறியுள்ளேன். அத்தோடு படகு, கப்பல், புகைவண்டி, ஆகாய விமானம் போன்ற ஏனய வாகனங்களில் பிரயாணம் செய்யும் போது எவ்வாறு தொழ வேண்டும் என்ற சட்டங்களை சுருக்கமாகவும், தெளிவான விளக்கங்களோடும் கூறியுள்ளேன். மேலும் ஒரு பிரயாணி பிரயாணம் செய்கின்ற போது நபிலான தொழுகைகளைத் தொழுவதன் சட்டம் என்ன? என்பதையும்



தெளிவாகக் கூறியுள்ளேன். அவை ஒவ்வொன்றுக்கும் என்னால் முடியுமான ஆதாரங்களையும் இணைத்துள்ளேன்.

மேலும், இதற்காக நான் எம் ஆசிரியர் இமாம் அப்துல் அஸீஸ் பின் பாஸ் அவர்களின் முடிவுகளிலிருந்தும், அவர்கள் கூறிய ஏற்கத் தகுந்த கருத்துக்களிலிருந்தும் அதிக பயனடைந்தேன். அல்லாஹ் அவர்களுக்கு அருள் புரிவதோடு, அவர்களது அந்தஸ்து-களையும் உயர் மிக்க ∴பிர்தௌஸ் எனும் சுவர்க்கத்த்தில் உயர்த்துவானாக!

இன்னும் என் இச்செயலை அல்லாஹ் ஏற்றுக் கொள்வானாக! நல்லருள் புரிவானாக, தூய மனதையும் தந்தருள்வானாக! இதன் மூலம் இவ்வுகிலும், மறு உலகிலும் பயன் பெறச் செய்வானாக! இதன் மூலம் அதனைப் படிக்கும் அனைவரையும் பயன் பெறச் செய்வானாக! நிச்சயமாக அவன் தூய்மையானவன். அவனே கேட்பதற்கு சிறந்தவனும், எதர்பார்ப்புகளை கண்ணியமாய் மதிப்பவனுமாவான். அவனே போதுமாவன். பாவத்தை விட்டும் திருப்பவோ, நன்மையைச் செய்யவோ அல்லாஹ்வால் தவிர

வேறு எவருக்கும் எந்த ஆற்றலுமில்லை. மேலும் அவனது அடியாரும், தூதரும் படைப்புகளில் சிறந்தவருமாகிய எமது நபி, எமது தலைவர், எமது முன்மாதரி முஹம்மது பின் அப்துல்லாஹ்வின் மீதும் அவர்களது குடும்பத்தவர்கள், தோழர்கள் ஆகியோர்கள் மற்றும் மறுமை நாள் வரை அவர்களைப் பின் துயரும் அனைவர் மீதும் அல்லாஹ்வின் அருளும் சாந்தியும் உண்டாகட்டுமாக.

**முதலாவது:** நோய் என்பது யாது?

நோய் என்பது ஆரோக்கியத்தின் எதிர் மறையாகும். உடம்பிலும், மார்க்கத்திலும் ஆரோக்கியம் உள்ளது போல், இவ்விரண்டிலும் அதற்கு எதிரான நோயும் உண்டு. உள்ளதில் நோய் எனப்படுவது, ஒரு மனிதனின் மார்க்க விடயங்களில் உள்ள அனைத்து குறைபாடு-களையும் குறிக்கும். எனவே! நோய் என்பது அடிப்படையில் குறைபாடாகும். நோயான உடம்பு என்றால் ஆரோக்கியமற்ற, வலிமை குறைந்த உடம்பு என்று பொருளாகும். மேலும் நோயான உள்ளம் என்பது மார்க்க விடயங்களில் அவரிடம் உள்ள குறைகளையும்



சத்தியத்தை விட்டும் தூரமானதையும் குறிக்கும். நோயான உடம்பு என்பது உடல் உருப்புக்களில் ஏற்படும் சோர்வைக் குறிக்கும்.

நோய் என்பதன் பன்மை நோய்களாகும். அது ஒரு மனிதனின் உடம்பு, அல்லது உள்ளம் சீரான செயல்பாட்டை விட்டு சீரற்ற தன்மைக்கு மாறுவதைக் குறிக்கின்றது. மரண நோய் என்பது, ஒரு மனிதனை மரணத்துக்கு இட்டுச் செல்லும் என்று வைத்தியர்கள் எந்தக் காரணத்தைக் குறிக்கின்றனரோ அத்தகைய நோயாகும். எனவே, நோயாளி என்பவன் ஆரோக்கியத்தை இழந்தவனாவான். அது உடம்பின் ஒரு பகுதியில் வந்தாலும் அல்லது அனைத்துப் பகுதியில் வந்தாலும் அதற்கு நோய் என்றே கூறுப்படும்.

**இரண்டாவது**: ஒரு நோயாளியிடம் இருக்க வேண்டிய பொறுமையும் அதற்கான கூலியும்:

ஒரு நோயாளி தனக்கு ஏற்பட்டுள்ள நோயை பொறுமையுடன் சகித்துக் கொள்ள வேண்டும். அதன் மூலம் பொறுமையாளிகளுக்கு அல்லாஹ் வாக்களித்துள்ள நன்மைகளை அல்லாஹ்விடம் எதிர்பார்க்க வேண்டும். அல்லாஹ் கூறுகின்றான்:

‘‘நிச்சயமாக பொறுமையாளிகளுக்குக்

கணக்கின்றி கூலி வழங்கப்படும் என்று (இறைவன் கூறுவதைத்) தெரிவிப்பீராக!'' (39:10)

மேலும் அவன் கூறுகையில்:

''உங்களில் தியாகம் செய்தோரையும் பொறுமையாளரையும் அடையாளம் காட்டிட உங்களைச் சோதிப்போம், உங்கள் செய்திகளையும் வெளிப்படுத்துவோம்'' (47:31)

இன்னும் ஒரு வசனத்தில் அவன் கூறுகையில்:

''ஒவ்வொருவரும் மரணத்தைச் சுவைக்கக் கூடியவரே. நன்மை மற்றும் தீமையின் மூலம் பரீட்சித்துப் பார்ப்பதற்காக உங்களைச் சோதிப்போம். நம்மிடமே திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள்'' (21:35)

இன்னும் அவன் கூறுகின்றான்:

''இந்தப் பூமியிலோ, உங்களிடமோ எந்தத் துன்பம் நிகழ்ந்தாலும் அதை நாம் உருவாக்குவதற்கு முன்பே பதிவேட்டில் இல்லாமல் இல்லை. இது அல்லாஹ்வுக்கு எளிதானது. உங்களுக்கு தவறி விட்டதாக நீங்கள் கவலைப்படாமல் இருப்பதற்காகவும்,



அவன் உங்களுக்கு வழங்கியதில் வரம்பு மீறி மகிழ்ச்சி கொள்ளாதிருப்பதற்காகவுமே. கர்வமும் பெருமையும் கொண்ட எவரையும் அல்லாஹ் நேசிக்க மாட்டான்'' (57:22,23)

மேலுமொரு வசனத்தில் கூறுகிறான்:

''எந்தத் துன்பம் ஏற்பட்டாலும் அல்லாஹ்வின் விருப்பத்தைக் கொண்டே தவிர இல்லை. அல்லாஹ்வை யார் விசுவாசிக்கிறாரோ அவரின் உள்ளத்திற்கு அவன் வழி காட்டுவான். அல்லாஹ் ஒவ்வொரு பொருளையும் அறிந்தவன்.'' (64:11)

மேலும், ஓரளவு அச்சத்தாலும், பசியாலும், செல்வங்கள், உயிர்கள், மற்றும் பலன்களைச் சேதப்படுத்தியும் உங்களைச் சோதிப்போம். பொறுத்துக் கொண்டோருக்கு நற்செய்தி கூறுவீராக! (தமக்கு ஏதேனும் துன்பம் ஏற்படும் பொது 'நாங்கள் அல்லாஹ்வுக்கே உரியவர்கள், நாங்கள் அவனிடமே திரும்பிச் செல்பவர்கள் என்று கூறுவார்கள். அவர்களுக்கே தமது இறைவனின் அருளும் அன்பும் உள்ளன. அவர்களே நேர் வழி பெற்றவர்கள்.'' (2:155-157)

மேலும் அல்லாஹ் கூறுகையில்:

‘‘(யார் பிறரால் பாதிக்கப்பட்ட பின்) பொறுமையை மேற் கொண்டு மன்னிக்கிறாரோ அது உறுதி மிக்க காரியங்களில் ஒன்றாகும்.’’ (42:43)

நம்பிக்கை கொண்டோரே! பொறுமை மற்றும் தொழுகையின் மூலம் உதவி தேடுங்கள்! அல்லாஹ் பொறுமையாளர்களுடன் இருக்கின்றான்.’’ (2:153)

மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ‘பொறுமை ஒளியாகும்’ என அபூ மாலிக் அல் அஷ்அரீ (றழி) அவர்கள் அறிவிக்கிறார்கள். (முஸ்லிம்:223)

இன்னும் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக ஸுஹைப் (றழி) அவ்கள் அறிவிக்கிறார்கள்: ‘ஒரு மு.ஃமினின் விடயம் ஆச்சரியமாக உள்ளது. அவரின் அனைத்து விடயங்களும் நன்மையாக உள்ளது. அவ்வாறு ஒரு மு.ஃமினைத் தவிர வேறு எவருக்கும் எற்படாது. அவருக்கு மகிழ்வூட்டக் கூடிய ஏதும் நிகழ்ந்தால் அதற்காக நன்றி செலுத்துவார். உடனே அது அவருக்கு நன்மையாக மாறிவிடுகிறது. மேலும் அவருக்கு



ஏதும் தீங்குகள் ஏற்றபட்டால் அதனை பொறுமையுடன் சகித்துக் கொள்வார். உடனே அது அவருக்கு நன்மையானதாக மாறிவிடும். (முஸ்லிம்:2999)

மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறியதைக் கேட்டேன் என அனஸ் (றழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: ‘அல்லாஹ் கூறுகிறான்: நான் என் அடியானை அவனது பிரியத்துக்குரிய இரு பொருட்களை இழக்கச் செய்து சோதிப்பேன். அவன் பொறுமை காப்பானேயா-னால் அவற்றுக்குப் பதிலாக சொர்க்கத்தை நான் அவனுக்கு வழங்குவேன். (அவனுடைய பிரியத்திற்குரிய இரு பொருட்கள் என்பது அவனுடைய இரு கண்களாகும்) (புஹாரி:5653)

இன்னும் ஆயிஷா (றழி) அவர்கள் கூறுகின்றார்கள்: நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கொள்ளை நோய் பற்றிக் கேட்டேன். அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் தெரிவித்தார்கள்: ‘அது தான் நாடியவர்கள் மீது அல்லாஹ் அனுப்பும் வேதனையாக இருந்தது. (ஆனால் இப்போது) அதை இறை நம்பிக்கையாளர்களுக்கு

அல்லாஹ் கருணையாக ஆக்கிவிட்டான். ஆகவே! (இறைவனின்) அடியார் ஒருவர் கொள்ளை நோய் பரவும் போது தமக்கு அல்லாஹ் எழுதிய விதிப்படியே அல்லாமல் எந்த நோயும் தம்மைத் தீண்டாது என உறுதி பூண்டவராகத் தம் ஊரிலேயே பொறுமையுடன் (நிலை குலையாமல்) இருப்பாராயின் அவருக்கு உயிர்த்தியாகிக்குக் கிடைக்கும் நன்மையைப் போன்ற நன்மை (மறுமையில்) கிடைக்கும்.' (புஹாரி:5734)

மேலுமொரு ஹதீஸில் நபி (ஸல்) அவர்கள் கூறுகையில்: ' நிச்சயமாக பொறுமை என்பது முதல் கட்டத்தில் வர வேண்டிய ஒன்றாகும்.' (புஹாரி:1283, முஸ்லிம்:926)

மேலும் அபூ ஸஈத், அபூ ஹுறைறா (றழி) அவர்கள் இருவரும் நபியவர்கள் கூறியதாகக் கூறுகின்றார்கள்: 'ஒரு முஸ்லிமைத் தைக்கும் முள் உட்பட அவருக்கு நேரிடும் களைப்பு, நோய், துக்கம், கவலை, தொல்லை, மனவேதனை ஆகிய எதுவாயினும் அதற்குப் பதிலாக அவருடைய பாவங்களிலிருந்து சிலவற்றை அல்லாஹ் மன்னிக்காமல்



இருப்பதில்லை.' (புஹாரி:5641, முஸ்லிம்:2573)

அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (றழி) அவர்கள் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அறிவிக்கின்றார்கள்: 'எந்தவொரு முஸ்லிமுக்கும் நோய், மற்றும் அதல்லாத எந்தத் துன்பம் நேர்ந்தாலும் அதற்கு பதிலாக அவருக்கு ஒரு நன்மை எழுதப்படாமலும், அவரது ஒரு பாவம் மன்னிக்கப்படாமலும் இருப்பதில்லை. (முஸ்லிம்:2572)

இன்னுமொரு ஹதீஸில் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூ ஹுறைறா (றழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: 'யாருக்கு அல்லாஹ் நன்மையை நாடுகின்றானோ அவரை சோதனைக்கு உள்ளாக்குகின்றான்' (புஹாரி:5645)

மேலும் அனஸ் (றழி) அவர்கள் கூறுகிறார்கள்: 'நிச்சயமாக பெரும் துன்பங்களுக்குத் தான் பெரும் கூலி உள்ளது. அல்லாஹ் ஒரு சமுதாயத்தை நேசித்தால் அவர்களைச் சோதிக்கிறான். யார் அதில் திருப்தி கொள்கிறாரோ அவருக்கு (இறை) திருப்தி உண்டு. யார் அதில் அதிருப்பதி கொள்கிறாரோ

அவருக்கு (இறைவனின்) அதிருப்தியே உள்ளது.'' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (திர்மிதி:2396)

இன்னும் முஸ்அப் பின் ஸ.ஃ.த் (றழி) அவர்கள் தன் தந்தை கூறியதாக அறிவிக்கிறார்கள்: அல்லாஹ்வின் தூதரே! மனிதர்களில் அதிகம் சோதிக்கப்படுவோர் யார் என நான் கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள்: 'நபிமார்கள், அதற்கு அடுத்த தரத்திலுள்ளோர், அதற்கு அடுத்த தரத்திலுள்ளோர் (என்ற வரிசையில் சோதிக்கப்படுவர்). ஒருவர் அவரது மார்க்கப்பற்றுக்கேற்ப சோதிக்கப்படுவார். மார்க்கத்தில் உறுதியானவராக இருந்தால் அவரது சோதனையும் கடுமையாக இருக்கும். மார்க்கத்தில் உறுதி குறைந்தவராக இருந்தால் அவரது மார்க்கப்பற்றின் அளவுக்கேற்ப சோதிக்கப்படுவார். எந்தப் பாவமும் அற்றவராக நடமாடும் அளவுக்கு அடியான் சோதனைக்கு ஆளாவான் என்று விடையளித்தார்கள்' (திர்மிதி:2398)

**மூன்றாவது:** ஒரு முஸ்லிம் இவ்வுலகிலும், மறுமையிலும் அல்லாஹ்விடத்தில் மன்னிப்பையும்,



நல்லாரோக்கியத்தையும் மற்றும் தீமைகளை விட்டும் பாதுகாப்பையும் வேண்டுவார்.

அப்பாஸ் பின் அப்துல் முத்தலிப் (றழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நான் நபி (ஸல்) அவர்களிடம், அல்லாஹ்விடத்தில் வேண்டுவதற்காக ஒரு விடயத்தைக் கற்றுத் தாருங்கள் எனக் கேட்டேன். அதற்கு நபியவர்கள்: 'நீங்கள் அல்லாஹ்விடம் ஆரோக்கியத்தைக் கேட்பிராக!' என்றார்கள். பின்பு சில நாட்கள் தங்கிவிட்டு நபியவர்களிடம் வந்து அல்லாஹ்விடம் கேட்பதற்கு ஒரு விடயத்தைக் கற்றுத் தாருங்கள் என்றேன். உடனே 'அப்பாஸே! அல்லாஹ்வின் தூதரின் பெரிய தந்தையே! நீர் அல்லாஹ்-விடத்தில் இவ்வுலகிலும், மறுவுலகிலும் ஆரோக்கியத்தையே கேட்பீராக!' என்றார்கள்.' (திர்மிதி:3514)

மேலும் நபி (ஸல்) அவர்கள் மின்பர் மீது ஏறியவர்களாக 'நீங்கள் அல்லாஹ்விடத்தில் மன்னிப்பையும், நலத்தையும் கேளுங்கள். ஏனெனில், நிச்சயமாக எவருக்கும் உறுதியான ஈமானுக்குப் பின் நன்மையைத் தவிர சிறந்த எதுவும் கொடுக்கப்படவில்லை' எனக்

கூறினார்கள் என அபூபக்ர் (றழி) அவர்கள் அறிவிக்கிறார்கள். (திர்மிதி:3558)

இன்னும் அப்துல்லாஹ் பின் உமர் (றழி) அவர்கள் கூறினார்கள்: நபி (ஸல்) அவர்கள் 'இறைவனே! உனது அருள் நீங்குவதிலிருந்தும், நீ தரும் ஆரோக்கியம் தடை செய்யப்படுவதிலிருந்தும், திடீர் என நிகழும் உன் தண்டனையிலிருந்தும், உன் அனைத்துக் கோபத்திலிருந்து நான் பாதுகாப்புத் தேடுகிறேன்' என்று பிரார்த்திப்பவர்களாக இருந்தார்கள்' (முஸ்லிம்: 2739)

மேலும், அபூ ஹுறைறா (றழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்: 'நபி (ஸல்) அவர்கள் மோசமான தீர்ப்பை விட்டும், கடுமையான சோதனைகளை விட்டும், பாதுகாப்புத் தேடக் கூடியவர்களாக இருந்தார்கள்.' (முஸ்லிம்:2707)

**நான்காவது:** ஆரோக்கியமாக இருக்கின்ற நிலமைகளில் நல்லமல்களை செய்வதில் முயற்சி செய்தல்.

இவ்வாறு செய்யக் கூடியவர்களுக்கு அவர்கள் சுகவீனமுற்று அந்த அமல்களைச் செய்ய முடியாத நிலமைகளில் அவருக்கு அதற்கான



பூரண நன்மைகள் எழுதப்படும். இதற்கு அபூ மூஸா அல் அஷ்அரி (றழி) அவர்களின் ஹதீஸ் சான்றாக உள்ளது. அவர்கள் நபி (ஸல்) அவர்கள் கூறியதாகக் கூறுகின்றார்கள். 'ஓர் அடியான் நோய் வாய்ப்பட்டால், அல்லது பிரயாணம் செய்தால் அவனுக்கு, தான் ஆரோக்கியமானவனாக, பிரயாணம் செய்யாமல் ஊரில் தங்கியிருந்த காலங்களில் செய்த அமல்களை செய்தது போன்ற நன்மைகள் எழுதப்படும். (புஹாரி:2996)

**ஐந்தாவது:** இஸ்லாமிய மார்க்கத்தின் எளிதான நடைமுறையும், இலகுவான போக்கும், பரிபூரணத்துவமும்.

அல்லாஹ் அவனது திருமறையில் கூறுகின்றான்:

''இம்மார்க்கத்தில் அவன் உங்களுக்கு எந்தச் சிரமத்தையும் ஏற்படுத்தவில்லை.'' (22:78)

மேலும், அவன் கூறுகையில்:

''அல்லாஹ் உங்களுக்கு எளிதானதையே நாடுகின்றான். சிரமமானதை உங்களுக்கு நாடமாட்டான்'' (2:185)

இன்னும் கூறும் போது:

“உங்களால் இயன்றவரை அல்லாஹ்வை நீங்கள் அஞ்சுங்கள்” (64:16)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ‘நான் உங்களுக்கு சொல்லாது விட்டுவிட்டவைகளில் (என்னிடம் கேள்வி கேட்காது) என்னை விட்டுவிடுங்கள். நிச்சயமாக உங்களுக்கு முன் இருந்தவர்கள் அதிக கேள்விகள் கேட்டதாலும், தங்களது நபிமார்களுடன் வேறுபட்டதாலும் தான் அழிந்தார்கள். எனவே! நான் உங்களுக்கு ஒரு விடயத்தை ஏவினால் அதனை நீங்கள் உங்கள் சக்திக்கு ஏற்றவிதத்தில் எடுத்துக் கொள்ளுங்கள். நான் எதையேனும் தடுத்ததால் அதனை முழுமையாகத் தவிர்த்துக் கொள்ளுங்கள்’ (புஹாரி:1337)

மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ‘நிச்சயமாக மார்க்கம் எளிதானதாகும்’ (புஹாரி:39)

**ஆறாவது:** நோயாளி சுத்தம் செய்யும் முறை:

1- ஒரு நோயாளி வுழூவை முறிக்கக்கூடிய சிறு தொடக்கிலிருந்து வுழூ செய்து தன்னை சுத்தம் செய்து கொள்ள வேண்டும். இன்னும் அவர் (குளிப்பைக் கடமையாக்கும்) பெருந் தொடக்கிலிருந்து குளித்து சுத்தம் செய்து கொள்ள வேண்டும்.



2- வுழூ செய்யு முன் தன் இரு முன் பின் துவாரங்களினால் வெளியாகக் கூடிய அசுத்தங்களை தண்ணீரால் நீக்கிக் கொள்வது அவசியமாகும். ஏனெனில், ‘நபி (ஸல்) அவர்கள் தண்ணீரால் சுத்தம் செய்யக் கூடியவர்களாக இருந்தார்கள்.’ (புஹாரி:150, முஸ்லிம்:271)

மேலும் தண்ணீருக்குப் பதிலாக கற்களையோ அல்லது அதற்குப் பகரமானதையோ உபயோகித்து சுத்தம் செய்து கொள்ளலாம். ‘கற்களுக்குப் பகரமாக’ என்பதன் கருத்து என்னவெனில், சுத்தமான, கட்டியான தடை செய்யப்படாத (கண்ணியப்படுத்தப்படாத) அனைத்துப் பொருட்களுமாகும். உதாரணமாக: பலகைத் துண்டு, பிடவை, காகிதம் போன்ற உறிஞ்சி எடுக்கும் அனைத்துப் பொருட்களும் கற்களைப் போன்றதாகும். இதுவே சரியான கருத்தாகும்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ‘உங்களில் ஒருவர் மலசல கூடத்திற்குச் சென்றால் அவர் தன்னுடன் மூன்று கற்களை எடுத்துச் சென்று

சுத்தம் செய்து கொள்ளட்டும். நிச்சமாக அது அவனுக்கு நிறைவேறிவிடும்' (அபூதாவூத்:40)

இவ்விடயத்தில் மூன்று கற்கள் அல்லது அதற்குப் பகரமாக உபயோகிக்கக் கூடியதொன்று அவசியமாகும்.

ஸல்மான் (றழி) அவர்கள் கூறுகின்றார்கள்: 'மலசலம் கழிக்கும் போது கிப்லாவை முன்னோக்க வேண்டாமென்றும், (மலசலம் கழித்த பின்) வலக்கரத்தால் சுத்தம் செய்ய வேண்டாம் என்றும், மூன்றைவிடக் குறைவான கற்களால் சுத்தம் செய்ய வேண்டாம் எனவும், மற்றும் விட்டைகள், எலும்புகளால் சுத்தம் செய்ய வேண்டாமென்றும் எங்களை நபி (ஸல்) அவர்கள் தடுத்தார்கள்' (முஸ்லிம் 262)

எனவே, மூன்று கற்கள் போதாவிட்டால் நான்காகவோ, ஐந்தாகவோ சுத்தம் செய்யப்பட வேண்டிய உறுப்புக்கள் பூரணமாக சுத்தமாகும் வரை கற்களை உபயோகிக்க வேண்டும். மேலும் கற்களால் சுத்தம் செய்யும் போது அவற்றை ஒற்றைப்படயாக உபயோகித்துக் கொள்வது மிகவும் சிறந்தது. நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுறைறா (றழி) அவர்கள்



அறிவிக்கிறார்கள்: 'யார் சுத்தம் செய்கிறாரோ அவர் ஒற்றைப்படயான கற்களால் சுத்தம் செய்து கொள்ளட்டும்.' (புஹாரி:162, முஸ்லிம்:237)

மேலும், ஒருவர் கற்களால் சுத்தம் செய்து விட்டு அதன் பின் தண்ணீரால் சுத்தம் செய்து கொள்வதும் சிறந்ததாகும். ஏனெனில், கற்கள் அசுத்தத்தை நீக்கிவிடுகின்றது. தண்ணீரோ அசுத்தமான இடத்தை சுத்தம் செய்கின்றது. இவ்வாறு செய்வது சுத்தம் செய்வதில் மிக மேலான வழி முறையாகும். எனவே, ஒருவர் கற்களால் சுத்தம் செய்தல், அல்லது தண்ணீரால் அசுத்தத்தை நீக்குதல், அல்லது இவ்விரண்டையும் ஒன்றாகச் செய்தல் ஆகியவற்றில் தனக்கு விருப்பமானதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள முடியும். இரண்டு முறைகளையும் ஒரே சந்தர்ப்பத்தில் உபயோகிப்பது மிகவும் சிறந்ததாகும். அவ்வாறின்றி, இரு முறைகளில் ஒன்றைத் தேர்ந்தெடுத்து சுத்தம் செய்ய விரும்பினால் தண்ணீரைப் பயன்படுத்துவது சிறந்ததாகும். ஏனெனில், தண்ணீரை உபயோகிப்பது அசுத்தம் வெளியான இடத்தை சுத்தப்படுத்துவதுடன் அதன் அடையாளத்தையும் நீக்கிவிடுகின்றது.

இன்னும் இரு துவாரங்களினாலும் ஈரமாக வெளியாகக் கூடியவைகளான சிறு நீர், மலம், போன்றவற்றை தண்ணீரால் சுத்தம் செய்ய வேண்டும். மாறாக, தூக்கம், காற்று வெளியாகுதல், ஒட்டக இறைச்சி சாப்பிடுதல், அபத்தைத் தொடுதல் போன்றவற்றிற்காக தண்ணீரால் சுத்தம் செய்ய வேண்டுமென்பதில்லை. இரு துவாரங்களாலும் வெளியாகும் அசுத்தங்களை நீக்கவே தண்ணீரைக் கொண்டு சுத்தம் செய்யும் முறை கடமையாக்கப்பட்டுள்ளது.

3) நோயாளி அசைய முடியாதளவுக்கு நோய்வாய்ப் பட்டிருந்தால் இன்னொருவர் அவரை வுழூச் செய்து வைக்க வேண்டும். அவர் பெருந் தொடக்குள்ளவராக இருந்தால் அவரைக் குளிப்பாட்டுவதில் உதவி செய்ய வேண்டும். அவரது வெட்கட்தளங்களைப் பார்க்கக் கூடாது.

4) நோயாளி தண்ணீரால் சுத்தம் செய்ய முடியவில்லை, தனக்கு ஏதும் தீங்கு ஏற்படும், அல்லது தன் உறுப்புக்கு ஏதும் நோவினை ஏற்படும், அல்லது தண்ணீரை உபயோகிப்பதினால் வேறு புதிதாக இன்னொரு நோய் ஏற்படும்



அல்லது அவரால் தண்ணீரை உபயோகித்தால் நோய் மேலும் அதிகரித்து குணமடைய தாமதிக்கும் என்ற அச்ச நிலை ஏற்படும் போது அவர் தயம்மும் செய்து கொள்ளலாம். அல்லாஹ் கூறுகின்றான்:

‘‘உங்களை நீங்கள் கொலை செய்து கொள்ளாதீர்கள். நிச்சயமாக அல்லாஹ் உங்களிடம் மிக்க கிருபையுடையோனாக இருக்கின்றான்’’ (4:29)

## தயம்மும் செய்யும் முறை

சுத்தமான மண்ணின் மீது ஒரு தடவை தன் இரு கைகளையும் அடித்து, முகத்தை முழுமையாகத் தடவிக் கொள்ள வேண்டும். பின்னர் தன் இரு முன்னங்கைகளையும் மணிக்கட்டு வரை தடவிக் கொள்ள வேண்டும். அல்லாஹ் திருமறையில் கூறுகிறான்:

‘‘இன்னும் நீங்கள் நோயாளிகளாகவோ, அல்லது பிரயாணத்திலோ, அல்லது மல சலம் கழத்தோ, அல்லது பெண்களைத் தீண்டி (தாம்பத்திய உறவு கொண்டு) இருந்தோ, (சுத்தம் செய்து கொள்ள) நீங்கள் தண்ணீரைப் பெற்றுக் கொள்ளாவிடில் பரிசுத்தமான

மண்ணை நாடுங்கள். (அதைத் தொட்டு) உங்களுடைய முகங்களையும், கைகளையும் (தயம்மும் செய்து) தடவிக் கொள்ளுங்கள். (பிறகு தொழுங்கள்) நிச்சயமாக அல்லாஹ் (பிழைகளை) மிகப் பொறுப்பவனாக, (குற்றங்களை) மிக்க மன்னிப்பவனாக இருக்கின்றான்" (4:43)

இன்னோரு வசனத்தில் அவன் கூறுகையில்:

''இன்னும் நீங்கள் நோயாளியாகவோ, அல்லது பிரயாணத்திலோ இருந்தால், அல்லது நீங்கள் பெண்களை (உடலுறவின் மூலம்) தீண்டியிருந்தாலும் அப்பொழுது (சுத்தம் செய்து கொள்ள) தண்ணீரை பெறாவிடில், பரிசுத்தமான மண்ணை நாடுங்கள். பின்னர் அதிலிருந்து உங்களுடைய முகங்களையும், உங்களது கைகளையும் தடவி (தயம்மும் செய்து) கொள்ளுங்கள்! நீங்கள் அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்துவதற்காக அவன் உங்களைப் பரிசுத்தமாக்கி வைக்கவும், தன் அருட் கொடையை உங்கள் மீது பூரணமாக்கி வைக்கவுமே நாடுகின்றான்" (5:6)



5) நோயாளி தயம்மும் செய்து கொள்வதற்கு தன்னால் முடியாவிட்டால் அவரிடத்தில் இருப்பவர்களில் ஒருவர் சுத்தமான மண்ணைக் கொண்டு வந்து அவரை தயம்மும் செய்துவிட வேண்டும்.

6) ஒருவருக்கு காயங்கள் அல்லது எலும்பு முறிவுகள் அல்லது நோய் ஏற்பட்டு, தண்ணீர் உபயோகிப்பது தீங்கு விளைவிக்கும் என்றிருந்தால் அவர் தயம்மும் செய்து கொள்ளலாம். அவர் சிறு தொடக்கேற்பட்டவராக இருந்தாலும், பெருந்தொடக்கேற்பட்டவராக இருந்தாலும் தயம்மும் செய்து கொள்ள முடியும். ஆனால், அவருக்கு தன் உடம்பின் நலமுள்ள பகுதியை அல்லது உறுப்புக்களைத் தண்ணீரால் கழுவ முடியுமாயின் அதனைக் கழுவுவது அவசியமாகும். மேலும் ஏனைய உறுப்புக்களை தயம்மும் செய்து கொள்ள வேண்டும். ஏனெனில், அல்லாஹ் கூறுகின்றான்:

''உங்களால் இயன்றவரை அல்லாஹ்வை அஞ்சுங்கள்" (65:16)

மேலும் கூறுகையில்:

''எவரையும் அவரது சக்திக்குட்பட்டே தவிர

அல்லாஹ் சிரமப்படுத்தமாட்டான்" (2:286)

7) வுழூவின் உறுப்புக்களில் காயம் ஏற்பட்டு அதனைத் தண்ணீரால் கழுவிக் கொள்ள முடியுமாயின் அவ்வாறு கழுவிக் கொள்ள வேண்டும். அவ்வாறின்றி தண்ணீரால் கழுவுவதால் ஏதும் தீங்குகள் ஏற்படுமாயின் அவர் தண்ணீரை கையால் தொட்டு ஒரு தடவை தடவிக் கொள்ள வேண்டும். அவ்வாறு தண்ணீரால் தடவிக் கொள்வதாலும் ஏதும் விளைவை ஏற்படுத்தும் என்றிருப்பின் அவர் அக்காயத்தின் மீது காயக்கட்டு (பெண்டெஜ்) அல்லது காய ஒட்டி (பிளாஸ்டர்) அணிந்து அதன் மீது தடவிக் கொள்ள வேண்டும். அதற்கும் அவரால் முடியவில்லை என்றால் தயம்மும் செய்து கொள்ள வேண்டும்.

காயம் சுன்னாம்பு, அல்லது பிளாஸ்டர், அல்லது பெண்டேஜ், அல்லது இவை போன்ற ஒன்றால் மறைக்கப்பட்டிருந்தால் அவர் மறைத்திருக்கும் இடத்திற்கு மேலும் தடவிக் கொண்டால் போதுமானதாகும்.

தண்ணீரால் நன்கு கழுவிக் கொள்ள வேண்டிய அவசியமில்லை. பெண்டேஜ் போடும் போது



வுழூச் செய்து சுத்தமாக இருக்க வேண்டும் என்பது நிபந்தனையல்ல என்பது ஏற்கத் தகுந்த கருத்தாகும். மேலும் பெண்டேஜ் மீது தடவுவதற்காக குறிப்பிட்ட கால எல்லை ஏதும் இல்லை. ஏனெனில் அதன் மீது தடவிக் கொள்வதற்கான அனுமதி நிர்ப்பந்திக்கப்பட்ட நிலையிலாகும். எனவே அந்நிர்ப்பந்த நிலை நீங்கும் வரை அதன் மீது தடவிக் கொள்ளலாம்.

இவ்வாறு மேற்குறிப்பிடப்பட்டவாறு அணியும் ஒருவர் பெருந் தொடக்குடையவராகவும் அல்லது சிறு தொடக்குடையவராகவும் இருந்தாலும் தண்ணீரால் தடவிக் கொள்வது போதுமானதாயிருப்பின் தயம்மும் செய்ய வேண்டிய அவசியமுமில்லை. மேலும் தண்ணீரால் தடவிக் கொள்ள முடியாதவாறு மற்றுமொரு உறுப்புக்கு காயம் ஏற்பட்டிருந்தால் முதல் உறுப்பை தண்ணீரால் தடவிக் கொள்வதுடன் மற்ற உறுப்பிற்காக தயம்மும் செய்து கொள்ள வேண்டும்.

8) நோயுற்றவர் ஒரு தொழுகைக்காக தயம்மும் செய்து அவர் மறு தொழுகைக்கான நேரம் வரும் வரைக்கும் (முதல் செய்த) தயம்மும்

முறியாத நிலையில் அதனைப் பேணியவராக இருந்தால் அவர் அடுத்த தொழுகையையும் முதல் செய்த தயம்முத்தைக் கொண்டு தொழுது கொள்வார். இரண்டாவது தொழுகைக்காக மீண்டும் தயம்மும் செய்யத் தேவையில்லை. ஏனெனில், வுழூவை முறிக்கக்கூடிய காரியங்கள் ஏதும் நிகழாது சுத்தமாக இருக்கின்றார். மேலும் வுழூவை முறிப்பவைகளைத் தவிர வேறு எக்காரியங்களும் தயம்முத்தை முறித்துவிடாது.

9) நோயுற்றவர் தனது ஆடை, தொழுமிடம் ஆகியவற்றிலிருந்து அசுத்தங்களை நீக்கிக் கொள்வது கடமையாகும். அவ்வாறு சுத்தம் செய்து கொள்ள அவரால் முடியவில்லை, அத்துடன் தன்னிடம் உள்ள அசுத்தங்களை நீக்கிவிட வேறு எவரும் இல்லை என்ற நிலையில் இருந்தால் அவர் எந்நிலையில் இருக்கின்றரோ அவ்வாறே தொழுது கொள்ள வேணடும்.அவரது தொழுகை ஏற்றுக் கொள்ளப்படும். அதனை மீண்டும் தொழ வேண்டும் என்ற தேவையில்லை. எனினும் அவரால் அழுக்கான ஆடையை மாற்றி சுத்தமான இன்னொரு ஆடையை அணிந்து



கொள்ளவோ அல்லது அசுத்தமான விரிப்பை மாற்றி சுத்தமான ஒரு விரிப்பை விரித்துக் கொள்ளவோ முடியுமாயின் கட்டாயம் அவர் அவ்வாறு செய்து கொள்ள வேண்டும்.

10) ஒரு நோயாளி தன்னை சுத்தம் செய்து கொள்ள முடியவில்லை என்பதற்காக தொழுகையை அதன் உரிய நேரத்தை விட்டு பிற்படுத்துவது கூடாது. அவர் தன் சக்திக்கு ஏற்ப உடம்பையும், ஆடையையும், தொழும் இடத்தையும் சுத்தம் செய்து கொள்ள வேண்டும். தண்ணீரை உபயோகிக்க முடியவில்லையெனில் தயம்மும் செய்து கொள் வேண்டும். அவரால் அதற்கும் முடியாவிட்டால் அவர் சுத்தம் செய்து கொள்ளத் தேவையில்லை. அவர் இருக்கும் நிலமைக்கு ஏற்ப தொழுது கொள்ள வேண்டும்.

11) அடிக்கடி சிறு நீர் வெளியாகுதல், அல்லது தொடர் உதிரப் போக்காக இருத்தல், அல்லது காற்று வெளியாகுதல் இது போன்ற நோய் ஒருவருக்கு ஏற்ப்பட்டு, சிகிச்சைக்குப் பிறகு அவர் பரிபூரண ஆரோக்கியத்தைப் பெறாதவராக இருந்தால் அவர் ஒவ்வொரு தொழுகையினதும் நேரம் நுழைந்த பிறகு வுழூ செய்து கொள்ள

வேண்டும். அவரது உடம்பில், ஆடையில் படக்கூடிய அசுத்தத்தை சுத்தமும் செய்ய வேண்டும். அல்லது முடியுமாயின் அவர் தொழுகைக்காக ஒரு சுத்தமான ஆடையை வைத்துக் கொள்ள வேண்டும்.

மேலும், சிறு நீர் அல்லது இரத்தம் தன் உடம்பிலும், ஆடையிலும் தொழும் இடத்திலும் பரவ விடாமல் தடுத்துக் கொண்டு, பேணுதலாக இருக்கவும் வேண்டும். தொழும் நேரங்களில் தனக்கு முடியுமான தொழுகைகளைத் தொழுவதுடன் திருக்குர்ஆனையும் ஓதிக் கொள்ளலாம். தொழுகையின் நேரம் முடிவடைந்ததும் அவர் மீண்டும் வுழூவைச் செய்து கொள்ள வேண்டும். அல்லது அவ்வாறு முடியாவிட்டால் தயம்மும் செய்து கொள்ள வேண்டும். ஏனெனில், நபி (ஸல்) அவர்கள் நோயின் காரணமாக தொடர் உதிரப் போக்குள்ள ஒரு பெண்ணுக்கு ஒவ்வொரு தொழுகைக்காவும அதன் நேரத்தில் வுழூ செய்யுமாறு கட்டளையிட்டார்கள். மேலும் அல்லாஹ் அவன் திருமறையில்:

''உங்களால் இயன்றவரை அல்லாஹ்வை



அஞ்சுங்கள்'' என்று கூறுகிறான். (64:16)

எனவே! இவ்வசனம். ஷரீஅத்தின் எளிதான போக்கை நமக்கு தெளிவு படுத்துகின்றது.

**ஏழாவது:** நோயாளி தொழும் முறை பின்வருமாறு:

1- ஒரு நோயாளி தனது நோய் அதிகரித்துவிடும் என்ற பயம் இல்லையெனில் அவர் நின்றவராகத் தொழுவது கடமையாகும். ஏனெனில், அல்லாஹ் குர்ஆனில் கூறுகின்றான்:

''மேலும் (தொழுகையில்) அல்லாஹ்வுக்குப் (பயந்து) பணிந்தவர்களாக நில்லுங்கள்!'' (2:238)

2) ஒரு நோயாளி ஒரு தடியை ஊன்றியவ-ராகவோ அல்லது சுவரில் சாய்ந்தவராகவோ, அல்லது அவருக்குப் பக்கத்திலுள்ள ஒரு பொருளின் மீது ஊன்றியவராகவோ நின்று தொழ முடியுமாயின் அவர் நின்று தொழுது கொள்வது அவருக்குக் கட்டாயமாகும். ஏனெனில், வாபிஸா எனும் நபித் தோழர் உம்மு கைஸ் (றழி) அவர்களின் வாயிலாக அறிவிக்கின்றார்கள்:

நபி (ஸல்) அவர்கள் வயது முதிர்ந்தவராகி

அவர்களது மேனி தடித்திருந்த போது தன் தொழுமிடத்தில் ஒரு தடியை எடுத்து அதன் மீது ஊன்றியவராகத் தொழுதார்கள்' (அபூதாவுத்:948)

ஏனெனில், அவர்கள் தடங்கள் எதுவுமின்றி நிற்பதற்கு சக்தியுடையவர்களாக இருந்தார்கள்.

இம்றான் பின் ஹுஸைன் (றழி) அவர்கள் நபி (ஸல்) அவர்கள் ஒரு முறை அவர்களுக்குக் கூறியதாக அறிவிக்கிறார்ள்: 'நீங்கள் நின்று தொழுங்கள்....' (புஹாரி: 1117)

3) நோயுற்றவர் றுகூ:. செய்கின்றவரைப் போன்று தன் முதுகு வளைந்த நிலையில் இருந்து அவரால் நின்று தொழ முடியுமாயின் அவசியம் நின்று தொழ வேண்டும். உதாரணமாக முதுகெலும்பு வெளிப்பக்கமாக வளைந்த நியைில் உள்ளவர், அல்லது வயது முதிர்ந்ததன் காரணமாக முதுகு வளைந்தவர் போன்றோர்-களாவர். மேற்கூறப்பட்ட இம்றான் (றழி) அவர்களின் ஹதீஸ் இதற்கு சான்றாக உள்ளது.

4) நோயுற்றவர் நின்று தொழச் சக்தியுடையவராக இருக்கின்றார். ஆனால் றுகூ:. ஸுஜூது செய்ய முடியவில்லையெனில், அவர்



நின்று தொழ வேண்டும். அவரால் முடியுமானவரை றுகூ:.வை சமிக்கை செய்ய வேண்டும். இவ்வாறு தன் முதுகை வளைத்து சமிக்கை செய்யவும் முடியாவிட்டால் அவரது பிடரியை (கழுத்தை) வளைத்தவராக றுகூ:. செய்து கொள்ள வேண்டும். மேலும் அவர் இயற்கையில் றுகூ:.. செய்தவரைப் போல் முதுகு வளைந்தவராக இருந்தால் இன்னும் சற்று அதிகமாக வளைத்து றுகூ:. செய்ய வேண்டும். அதன் பிறகு உட்கார்ந்தவராக முகத்தை ஸுஜூது செய்வதற்காக பூமியளவில் முடியுமான வரை தாழ்த்தி ஸுஜூது செய்ய வேண்டும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

> ''மேலும் (தொழுகையில்) அல்லாஹ்வுக்குப் (பயந்து) பணிந்தவர்களாக நில்லுங்கள்.'' (2:238).

மேலும் நபியவர்கள் இம்றான் பின் ஹுஸைன் (றழி) என்ற நபித் தோழருக்கு கூறியது போன்று 'நீங்கள் நின்று தொழுங்கள்.' (புஹாரி: 1117) ஏனெனில், நின்று தொழுவதற்துகு சக்தியுடையவர் அவ்வாறு நிறைவேற்றுவது கடமையாகும்.

5) நோயாளி எழுந்து தொழுவது அவரது நோயை அதிகரிக்கச் செய்யுமாயின், அல்லது அவரால் எழுந்து தொழுவது மிக கஷ்டத்தை ஏற்படுத்துமாயின் அல்லது நின்று தொழுவது தீங்கை ஏற்படுத்தும. அல்லது தொழுது கொள்ளலாம்.

அல்¢ாஹ் கூறுகின்றான்:

‘‘உங்களால் இயன்றவரை அல்லாஹ்வை அஞ்சுங்கள்!” (64:16)

மேலும் கூறுகையில்:

‘‘எவரையும் அவரது சக்திக்கு உட்பட்டே தவிர அல்லாஹ் சிரமப்படுத்தமாட்டான்” (2:286)

இன்னொரு வசனத்தில்:

அல்லாஹ் உங்களுக்கு எளிதானதையே நாடுகின்றான், சிரமமானதை நாடமாட்டான்.” (2:185)

மேலும் கூறும் போது:

(உங்கள் தந்தை இப்றாஹீமின் மார்க்கமான) இம்மார்க்கத்தில் அவன் உங்களுக்கு எந்தச் சிரமத்தையும் ஏற்படுத்தவில்லை.” (22:78)



மேலும் இம்றான் பின் ஹுஸைன் (றழி) அவர்களின் ஹதீதில் நபியவர்கள் கூறினார்கள்: ‘நீங்கள் நின்று தொழுங்கள், அதற்கு முடியவில்லை என்றால் உட்கார்ந்து தொழுங்கள்.’ (புஹாரி:1117)

மேலும் அனஸ் (றழி) அவர்களது ஹதீதில்: ஒரு முறை (ஸல்) அவர்கள் குதிரையிலிருந்து விழுந்ததால் அவர்களது வலப்பக்க தோளில் காயம் ஏற்பட்டது. நாங்கள் அவர்களை நலம் விசரிரிக்கச் சென்றோம், தொழுகை நேரம் வந்ததும் உடனே அவர்கள் உட்கார்ந்தவர்களாக எங்களுக்கு தொழுகை நடத்தினார்கள்.’ (புஹாரி: 689, முஸ்லிம்:411)

இன்னும் யார் நின்று தொழ முடியவில்லையோ அவர் உட்கார்ந்து தொழலாம் என்ற கருத்தை அறிஞர்கள் ஏகமானதாக ஏற்றுக் கொண்டுள்ளனர்.

6) ஒரு நோயாளி உட்கார்ந்தவாராகத் தொழுவதென்றால் அவர் இரு கால்களையும் மடித்து அமர்ந்தவராக (சம்மணம் போட்டவராக) தொழுவது சிறந்ததாகும். அவர் றுகூஃ செய்வதாக இருந்தாலும் அந்த அமர்வில் இருந்த நிலையில் றுகூஃ செய்வது ஆகுமானதாகும்.

ஏனெனில் றுகூ·. செய்பவர் நின்றவராகவே கருதப்படுவார்.

ஆயிஷா (றழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்: 'நான் நபி (ஸல்) அவர்கள் இரு கால்களையும் மடித்து (சம்மணம் போட்டு) அமர்ந்தவர்களாகத் தொழுவதைக் கண்டேன். (நஸாஈ:1662) ஒரு நோயாளி றுகூ·. செய்கின்ற போது தன் இரு கரங்களையும் இரு முழங்கால்களின் மீது வைப்பது சுன்னத்தாகும். ஸுஜூது செய்கின்ற போது பூமியின் மீது செய்வதே கடமையாகும். அவ்வாறு பூமியின் மீது ஸுஜூது செய்ய முடியவில்லை என்றால் தன் இரு கரங்களையும் பூமியின் மீது வைத்து ஸுஜூது செய்வதை சமிக்கை செய்ய வேண்டும்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: 'நான் ஏழு உறுப்புக்கள் (பூமியில்) படுமாறு ஸுஜூது செய்யுமாறு ஏவப்பட்டுள்ளேன் எனக் கூறிவிட்டு தனது கரத்தால் மூக்கு, இரு கைகள், முட்டுக் கால்கள் பாதவிரல்களின் ஓரங்கள் ஆகியவைகளை சுட்டிக் காட்டினாார்கள். அவ்வேளை அவர் றுகூ·. செய்தைப் விட தலையை சற்று கீழே தாழ்த்திக் கொள்ள



வேண்டும். ஏனெனில், அல்லாஹ் கூறுகின்றான்:

''உங்களால் இயன்றவரை அல்லாஹ்வை அஞ்சுங்கள்!'' (64:16).

மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: 'நான் உங்களை ஒரு செயலைக் கொண்டு ஏவினால் அதனை நீங்கள் உங்களால் இயன்றரை எடுத்துச் செயலாற்றுங்கள்.....'' (புஹாரி:7288, முஸ்லிம்:1337)

7) நோயாளியால் உட்கார்ந்து தொழ முடியவில்லையெனில் அவர் கிப்லாவின் பக்கம் தன் முகத்தை முன்னோக்கிய நிலையில் ஒரு பக்கம் சாய்ந்தவராகத் தொழ வேண்டும். வலது பக்கமாக சாய்ந்து கொள்வது மிகச் சிறந்ததாகும். எனெனில், இம்றான் (றழி) அவர்களின் ஹதீஸில் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: 'நீங்கள் நின்றவராகத் தொழுங்கள், அதற்கு முடியவில்லையெனில் உட்கார்ந்து தொழுங்கள். அதற்கும் முடியாவிட்டால் ஒரு பக்கம் சாய்ந்தவராகத் தொழுங்கள்' (புஹாரி:1117)

மேலும் ஆயிஷா (றழி அவர்கள் அறிவிக்கிறார்கள்: 'நபி (ஸல்) அவர்கள் பாதணி அணியும் போதும், தலைமுடி சீவும் போதும்,

சுத்தம் செய்கின்ற போதும், தங்களின் அனைத்து காரியங்களிலும் வலப்புறத்தை முற்படுத்துவதை விரும்பக் கூடியவர்களாக இருந்தார்கள்'' (புஹாரி:168, முஸ்லிம்:168)

8) நோயுற்றவர் ஒரு பக்கமாக சாய்ந்து தொழவும் முடியவில்லையெனில், அவர் தன் இரு கால்களையும் கிப்லாவின் பக்கம் நீட்டியவராக மல்லாந்து தொழ வேண்டும். எனெனில், இம்றான் (றழி) அவர்களது ஹதீஸில் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அறிவிக்கின்றார்கள். 'நீங்கள் நின்று தொழுங்கள், அதற்கு முடியாவிட்டால் உட்கார்ந்து தொழுங்கள் அதற்கும் முடியாவிட்டால் ஒரு பக்கம் சாய்ந்தவராகத் தொழுங்கள்'' (புஹாரி:1117)

மேலும் இமாம் நஸாஈ அவர்கள் மேலதிகமாக அறிவிக்கின்றார்கள்: 'சாய்ந்தவர்களாகத் தொழ முடியாவிட்டால் (இரு கால்களையும் கிப்லாவின் பக்கம் நீட்டியவராக) மல்லாந்து தொழ வேண்டும். எவரையும் அவரு சக்திக்குட்பட்டே தவிர அல்லாஹ் சிரமம்படுத்தமாட்டான்.' (நஸாஈ 10833)

மேலும் நான் (நூலாசிரியர்) எம் ஆசிரியர் இமாம்



அப்துல் அஸீஸ் பின் அப்துல்லாஹ் பின் பாஸ் (றஹ்) அவர்கள் கூறுவதைக் கேட்டேன். 'நஸாஈ அவர்கள் இதைப் பற்றி மேலதிகமாக 'அவரால் (சாய்ந்தவராக) தொழ முடியவில்லையெனில், மல்லாந்த நிலையில் தொழ வேண்டும்.' எனக் கூறினார்கள். இதனைத் தொடர்ந்து: எனவே, தொழுகையின் முறை: நின்றவராக, உட்கார்ந்தவராக, ஒரு பக்கம் சாய்ந்தவராக, மல்லாந்து படுத்தவராக ஆகிய முறைகளில் தொழுது கொள்ள முடியும் எனக் கூறினார்கள்.

9) மேலும் நோயாளியால் கிப்லாவை முன்னோக்கியவராகத் தொழுவதற்கோ அவருக்கு அத்திசையை முன்னோக்கி விடுவதற்கோ வேறு எவரும் இல்லையெனில் அவர் எந்நிலையில் இருக்கின்றாரோ அவ்வாரே தொழுது கொள்ள வேண்டும். எனெனில், அல்லாஹ் கூறுகின்றான்:

''எவரையும் அவரது சக்திக்கு உட்பட்டே தவிர அல்லாஹ் சிரமப்படுத்தமாட்டான்'' (2:286)

10) நோயிளியால் தான் மல்லாந்த நிலையில் தொழ முடியாவிட்டால் அவர் எந்நிலையில் இருக்கின்றாரோ அவ்வாறே தொழுது

கொள்ளட்டும். அல்லாஹ் அவன் திருமறையில் கூறுகையில்:

‘‘உங்களால் இயன்றவரை அல்லாஹ்வை அஞ்சுங்கள்’’ (64:16)

11) மேற்கூறப்பட்ட அனைத்து நிலமைகளிலும் அவரால் தொழ முடியாவிட்டால் அவர் தன் உள்ளத்தால் தொழ வேண்டும். தக்பீர் சொல்லி, குர்ஆனை (பாதிஹாவை) ஓத வேண்டும். றுகூஃ. ஸுஜுது, தொழுகையில் நிலையில் இருப்பது, அமர்வது போன்றவற்றை மனதால் எண்ணிக் கொள்ள வேண்டும். மேற் கூறப்பட்ட ஆதாரங்கள் அடிப்படையில் நிச்சயமாக அவரது சுய உணர்வு இருக்கும் எச்சந்தர்ப்பத்திலும் அவர் தொழுகையை விட்டுவிட முடியாது.

12) ஒரு நோயாளி தொழுது கொண்டிருக்கும் போது அவரால் செய்ய முடியாதிருந்த நின்று தொழுதல், உட்காருதல், றுகூஃ, ஸுஜுத் செய்தல் அல்லது சமிக்கை செய்து தொழுதல் போன்றவற்றிற்கு சக்தி பெற்றால் அவர் தன் இயலாமையெனும் நிலையிலிருந்து தன்னால் முடியுமானதைச் செய்து, மேலும் அவர் அத் தொழுகையை தொடர வேண்டும். இதற்கு



மாறாக மேற் கூறப்பட்டவைகளைச் செய்வதற்கு சக்தியுடையவராக இருந்து, தொழுகையின் நடுவில் சக்தியற்றவராகி அவரால் முடியவில்லையெனில் அவர் தனக்கு முடியுமான அமைப்பில் தன் சக்திக்கேற்றவாறு மீதமுள்ள பகுதியைத் தொழுது கொள்ள வேண்டும். அவர் ஆரம்பத்தில் தொழுதவைகள் ஆகுமானதாகும். அதைத் தொடர்ந்து மீதமுள்ளதை பூர்த்தி செய்து கொள்ள வேண்டும்.

12) நோயுற்றவர் பூமியின் மீது ஸுஜுது செய்ய முடியவில்லை என்றால் அவர் ஸுஜுதை சமிக்கை செய்து கொள்வார். மாறாக ஸுஜுது செய்து கொள்வதற்காக ஒரு பொருளை எடுத்து வைத்துக் கொண்டு அதன் மீது செய்யக் கூடாது.

ஜாபிர் (றழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் ஒரு நோயிளியை நலம் விசாரிப்பதற்காக சென்ற போது அந்த நோயாளி ஒரு தலையனையின் மீது தொழுவதைக் கண்டார்கள். உடனே நபியவர்கள் அதனை எடுத்து எறிந்துவிட்டார்கள். பின்னர் அம்மனிதர் ஒரு தடியை எடுத்து அதன் மீது தொழுவதற்கு முயன்ற போது அதனையும் எடுத்து எறிந்து

விட்டு அவரிடம் பின்வருமாறு கூறினார்கள். 'நீங்கள் பூமியின் மீது தொழுங்கள்! அதற்கு முடியாவிட்டால் சமிக்கை செய்து தொழுங்கள். மேலும் உமது றுகூஃவைவிட ஸுஜுதை சற்று கீழ்த் தாழ்த்திக் கொள்ளுங்கள்!" (பைஹகீ)

14) ஒரு நோயாளி எல்லாத் தொழுகைகளையும் அதன் நேரத்தில் தொழுவது கடமையாகும். தொழும் போது தன் சக்திற்கு ஏற்றவாறு அதன் கடமைகளைச் செய்து கொள்ள வேண்டும். தொழுகையை அதன் உரிய நேரத்தில் தொழுது கொள்வதற்கு சிரமமாக இருந்தால், லுஹரையும் அஸறையும், மஃரிபையும் இஷாவையும் சேர்த்துத் தொழுது கொள்ள முடியும் . அப்படி சேர்த்துத் தொழும் போது முற்படுத்தி அஸறை ளுஹரின் நேரத்திலும் இஷாவை மஃரிபின் நேரத்திலும தொழ முடியும். அல்லது பிற்படுத்தி ளுஹறை அஸறுடைய நேரத்திலும், மஃரிபை இஷாவுடைய நேரத்திலும் அவருடைய வசதிக்கேற்ப தொழுது கொள்ள முடியும். எனினும், ஸுப்ஹுத் தொழுகையை முற்படுத்தவோ அல்லது பிற்படுத்தவோ அல்லது இன்னொரு தொழுகையுடன் சேர்த்துத் தொழுது கொள்ளவோ முடியாது. ஏனெனில், அதன் நேரம்



மற்றய தொழுகைகளைப் போன்றல்லாது வேறுபட்ட தனியானதொரு நேரமாகும். மேலும் நோயாளிக்கு தொழுகையை அதன் உரிய நேரத்தில் தொழுவதற்கு முடியவில்லையெனில் அதனைச் சேர்த்துத் தொழுவதற்கான ஆதாரங்கள் பல உள்ளன. அவற்றில் 'இப்னு அப்பாஸ் (றழி) அவர்களுடைய ஹதீஸும் ஒன்றாகும். அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

'நபி (ஸல்) அவர்கள் எவ்வித அச்சமும், பிரயாணமும் இல்லாத நிலையில் ளுஹறையும் அஸ்ரையும், மஃரிபையும் இஷாவையும் சேர்த்துத் தொழுதார்கள்.'

மேலும் ஓர் அறிவிப்பில்: 'நபி (ஸல்) அவர்கள் எவ்வித அச்சமும், மழையும் இல்லாத சந்தர்ப்பங்களில் மதீனாவில் ளுஹர் அஸர், மஃரிப் இஷா ஆகிய தொழுகைகளைச் சேர்த்துத் தொழுதார்கள்.' நபியவாக்ள் ஏன் அவ்வாறு செய்தார்கள் என்று இப்னு அப்பாஸ் (றழி) அவர்களிடத்தில் கேட்கப்பட்ட போதுஇவ்வாறு கூறினார்கள்: 'நபியவர்கள் தன் சமூகத்தவா் எவரும் கஷ்டப்படக்கூடாது என்று விரும்பினார்கள்.

மற்றுமொரு அறிவிப்பில்: 'தனது சமூகத்ததினர் குற்றம் பிடிக்கப்படக் கூடாது என்று நாடினார்கள்.' இந்நபி மொழியின் சரியான கருத்து என்னவென்றால், தொழுகையை நோயின் காரணமாகவோ அல்லது இதுபோன்ற காரணங்களுக்காகவோ சேர்த்துத் தொழுவதையே குறிப்பிடுகின்றது. மேலும், நபி (ஸல்) அவர்கள் ஹம்னா பின்தி ஹுபைஷ் எனும் ஸஹாபிப் பெண்மனிக்கு நோயின் காரணமாக இரத்தம் வெளியாகிய வேளை ளுஹரை (அதன் இறுதி நேரம் வரை பிற்படுத்தி அஸரை (அதன் முதல் நேரத்தில) முற்படுத்தவும் ம.்.ரிபை அவ்வாறே அதன் இறுதி நேரம் வரை பிற்படுத்தி இஷாவை அதன் முதல் நேரத்தில் முற்படுத்தவும் கட்டளையிட்டார்கள்'

15) ஒரு நோயாளி சுய நினைவு இருந்து புத்தி தெளிந்தவராக இருக்கும் எந்நிலையிலும் தொழுகையை விடுவது கூடாது. மாறாக அவர் தான் சுகமாக இருக்கும் காலங்களைவிட நோயுற்று இருக்கும் காலங்களில் தொழுகையை விடாது தொழுவதற்கு அதிகம் ஆர்வம் கொள்வது கடமையாகும். அவர்



ஷரீஅத்ததின் சட்டப்படி தொழுகையை சமிக்கை செய்தாவது நிறைவேற்றுவதற்கு சக்தி பெற்றவராகவும், புத்தி நினைவும், அறிவும் இருக்கக்கூடியவராகவும் இருந்து அதனை விடுகின்ற போது பாவியாகி விடுகின்றார்.

மேலும் அறிஞர்கள் சிலர் இவ்வாறு அவர் தொழுகையை வேண்டுமென்று விடுகின்ற போது அது (கு.்.ப்ர்) இறை நிராகரிப்பாகும் என்று கூறுகின்றனர். ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: 'எமக்கும் அவர்களுக்கும் (கா.்.பிர்களுக்கும்) மத்தியிலுள்ள உடன்படிக்கை தொழுகையாகும். எவர் அதனை விட்டுவிடுகின்றாரோ அவர் (இறைவனை) நிராகரித்து (கா.்.பிராக)விட்டார்' (திர்மிதி: 2621)

மேலும், ஜாபிர் (றழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்: நபி (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டேன்: 'ஒரு மனிதனுக்கும், இணை வைத்தலுக்கும் இறை நிராகரிப்புக்கும் இடையில் உள்ளது தொழுகையை விடுவதாகும். (முஸ்லிம்: 76)

இன்னொரு ஹதீஸில் முஆத் (றழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்: 'விடயங்களில் தலையானது

இஸ்லாம், அதன் தூண் தொழுகை, அதன் உயர்ந்த சிகரம் ஜிஹாதாகும்.' (திர்மிதி: 2616)

16) ஒரு நோயாளி தொழுகையை விட்டு தூங்கி விட்டார், அல்லது அதனை மறந்துவிட்டால் அவர் தூக்கத்திலிருந்து விழிக்கும் போது அல்லது அதனை நினைவு கூரும் போது தொழுவது கடமையாகும். தொழுகையை உரிய நேரத்தில் விட்டு விட்டு அடுத்த தொழுகைக்கான நேரம் நுழைந்ததும் தொழுவதற்காக விடக்கூடாது.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

'எவர் தொழுகையை மறந்து விடுகின்றாரோ அவர் அதனை நினைவு கூரியதும் 'தொழுது கொள்ளட்டும். அதற்கான பரிகாரம் அதனைத் தொழுவதைத் தவிர வேறில்லை' என அனஸ் (றழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

இன்னும் முஸ்லிமில் இடம் பெற்றுள்ள ஓர் அறிவிப்பின் படி 'எவர் தொழுகையை மறந்து விடுகின்றாரோ அல்லது அதனை விட்டும் தூங்கி விடுகின்றாரோ அவருக்கு நினைவு வந்ததும், அல்லது தூக்கத்திலிருந்து விழித்ததும் தொழுது கொள்ளட்டும்!' (புஹாரி: 697, முஸ்லிம்: 684)



மேலும் புத்தி நீங்கிய ஒருவர் மூன்று அல்லது அதனைவிட குறைந்த நாட்களில் விடுபட்ட தொழுகைகளைக் கழாச் செய்து கொள்ள வேண்டும். ஏனெனில், அவர் தூங்கியிருக்கக் கூடிய ஒருவரின் சட்டத்தினுள் உள்ளவராகவே கருதப்படும். மாறாக மூன்று நாட்களுக்கு அதிகமாக சுய நினைவற்றவராக இருப்பவர் தொழுகையைக் கழாச் செய்யத் தேவயில்லை. ஏனெனில், இவர் புத்தி நீங்கி பைத்தியக் காரனின் சட்டத்தினுள் அடங்குவார்.

17) நோயுற்றவர் சிகிச்சை பெறுவதற்காக தன் ஊரிலிருந்து வெளியூருக்குச் சென்றிருந்தால், அவர் நான்கு றக்அத்துக்கள் உள்ள தொழுகைகளான ளுஹர், அஸர், இஷா ஆகியவைகளை இரண்டாகச் சுருக்கித் தொழுது கொள்ள முடியும். இவ்வாறு அவர் நான்கு நாட்களை விட அதிக நாட்கள் அவ்வூரில் தங்க மாட்டேன் என்ற உறுதி இருந்தால் மட்டும் சுருக்கித் தொழ வேண்டும்.

அவ்வாறின்றி நான்கு நாட்களைவிட அதிக நாட்கள் தங்கியிருக்கும் உறுதியான முடிவு அவருக்கு இருந்தால் சுருக்கித் தொழக் கூடாது.

இவ்வேளை அவர் ஊரில் தங்கியிருப்பவரைப் போன்று தொழ வேண்டும். மேலும் ம.்.ரிப் தொழுகையை பிரயாணத்திலும் பிரயாணம் செய்யாத காலத்திலும் மூன்றாகவும், ஸுப்ஹுத் தொழுகையை இரண்டாகவுமே தொழ வேண்டும். மேலும் ஸுப்ஹுத் தொழுகையை இரண்டாகவுமே தொழ வேண்டும். மேலும் ஃ. பஜ்ரின் இரண்டு றக்அத்துகளையும் தொழ வேண்டும். ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் அவ்விரண்டு றக்அத்துக்களையும் பிரயாணத்திலும் சரி ஊரில் தங்கியிருக்கும் போதும் விட்டதில்லை.

ஆயிஷா (றழி) அவர்கள் கூறுகின்றார்கள்:

'நபி (ஸல்) அவர்கள் இவ்விரு றக்அத்து-க்களையும் ஒரு போதும் விடுபவராக இருக்க-வில்லை.' (புஹாரி:1159, முஸ்லிம்:724)

மேலும், இவ்வாறு அவர் வித்றுத் தொழு-கையையும் தொழ வேண்டும். இப்னு உமர் (றழி) அவர்களது ஒரு ஹதீஸில் அறிவிக்க-ப்பட்டுள்ளது: 'நபி (ஸல்) அவர்கள் தனது பிரயாணத்தில் வாகனம் எத்திசைதயில் செல்லுமோ அத்திசையை நோக்கி பர்ழான தொழுகைகளைத் தவிர ஏனைய இராத் தொழுகையை சமிக்கை செய்து தொழுதுள்ளா-ர்கள். இன்னும் வாகனத்தின் மீது அமர்ந்தவராக வித்றுத் தொழுகையையும் தொழுதுள்ளார்கள்.' இன்னொரு அறிவிப்பின் படி 'அவர்கள் வாகனத்தின் மீது அமர்ந்தவர்களாக வித்றுத் தொழுகையைத் தொழுபவர்களாக இருந்தார்கள்' (புஹாரி:999, முஸ்லிம்:700)



மேலும் றாதிபான பர்ழான தொழுகைகளுக்கு முன் பின் உள்ள சுன்னத்துத் தொழுகைகளைப் பொறுத்த வரையில், ஒரு பிரயாணி அதனைத் தொழத் தேவை இல்லை என்பதே நபி வழியாகும். இப்னு உமர் (றழி) அவர்களது ஹதீதில் அறிவிக்கப்பட்டுள்ளது: நான் நபி (ஸல்) அவர்களை பிரயாணத்தின் போது தோழமை கொண்டேன். அல்லாஹ் அவர்களின் உயிரைக் கைப்பற்றும் வரை அவர்கள் இரண்டு றகஅத்துக்களுக்கு அதிகமாகத் தொழவே இல்லை. (புஹாரி: 1101, முஸ்லிம்: 689).

பொதுவாக சுன்னத்துத் தொழுகைகளை ஒருவர் பிரயாணத்திலும் ஊரில் தங்கியிருக்கும் போதும் தொழுது கொள்ளலாம். உதாரணமாக ளுஹா தொழுகை, இரவுத் தொழுகை, வுழூவின்

சுன்னத்து போன்றவைகளாகும். இமாம் நவவி (றஹ்) அவர்கள் கூறுகின்றார்கள். 'பொதுவாக சுன்னத்துத் தொழுகைகள் பிரயாணத்தின் போதும் தொழ முடியும் என்பதே அறிஞர்களின் ஏகோபித்த முடிவாகும்.' மேற் கூறப்பட்டவைகள் நான்கு நாட்களைவிட வெளியூரில் தங்குவது உறுதியாகாதவருக்கும் எப்பொழுது தன் ஊருக்கு மீண்டும் செல்வோம் என்ற அறிவு இல்லாதவருக்கும் உரிய சட்டங்களாகும். எனவே, அவர் நான்கு நாட்களுக்கு மேலாகவோ அல்லது ஊருக்கு மீண்டும் செல்லும் குறிப்பிட்ட நாள் உறுதியாகும் வரை ஒரு பிரயாணியின் சட்டத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். மேலும் ஒரு முஸ்லிம் ஒட்டகத்தில் அல்லது நடந்து ஒரு நாளைக்குக் குறைந்த அளவு செல்லும் பிரயாணத்தில் சுருக்கித் தொழாமல் இருப்பது சிறந்ததாகும். இத் தூரம் என்பது கிலோ மீட்டர் தூரமாகக் கணிக்கப்படுகின்றது. ஏனெனில் இத் தூரத்தின் அளவு பெரும்பாலானவர்களிடத்தில் உலக வழமையில் பிரயாணமாகவே கருதப்படுகிறது. மேலும் அவர் நான்கு நாட்களைவிட அதிகமாக தங்கி விடுவதென்தறு உறுதியாகிவிட்டால் அல்லது ஒரு நாளைக்குக்



குறைந்த தூரம் செல்பவராக இருந்தால் அவர் ஒரு பிரயாணியின் சட்டத்தைக் கடைக்பிடிக்காமல் இருப்பது சிறந்ததாகும். தொழுகைகளான ளுஹர், அஸர், இஷா ஆகியவைகளை ஊரில்இருப்பரைப் போன்று நான்காகத் தொழுது கொள்ள வேண்டும். அல்லாஹ்வே போதுமானவன்.

**எட்டாவது:** கப்பல், ஆகாய விமானம், புகையிரதம் ஏனைய வாகனங்கள் அல்லது பிராணிகள் மீது செல்லக் கூடியவர்கள் தொழும் விபரம் பின்வருமாறு:

1) கப்பல், புகையிரதம் ஆகியவைகளில் கடமையான தொழுகைகளை நின்றவாறு தொழுவது ஆகுமாகும்.

ஏனெனில், இப்னு உமர் (றழி) அயவர்களின் ஹதீஸில் அறிவிக்கின்றார்கள்: 'நபி (ஸல்) அவர்களும் கப்பலில் பிரயாணம் செய்வதைப் பற்றி வினவப்பட்ட போது அவர்கள் கூறினார்கள்.

'நான் எவ்வாறு கப்பலில் தொழுது கொள்வது? எனக் கேட்டதற்கு நபியவர்கள் கூறினார்கள்: 'நீர் தண்ணீரிலே முழ்கிவிடுவீர் என்ற அச்சம் உமக்கு இல்லையெனில், நீர் நின்றவராகத்

தொழுவீர்!' (ஹாகிம்)

அப்துல்லாஹ் பின் அபீ உத்பா (றழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். நான் ஜாபிர் இப்னு அப்துல்லாஹ், அபூ ஸஈதுல் ஹுத்ரி , அபூஹுறைறா ஆகியவர்களைக் கப்பலில் தோழமை கொண்டேன். அவர்கள் அனைவரும் கடலோரத்துக்குச் செல்ல முடியுமாக இருந்தும், கப்பலில் கூட்டாக நின்று தொழுதார்கள். மேலும், அவர்களில் ஒருவர் தொழுகை நடத்தினார்' ஷவ்கானி (றஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்' இந்த ஹதீஸில் நாடப்படுவது யாதெனில், அவர்கள் தரைக்குச் சென்று தொழுவதற்தகு இயலுமாக இருந்தும், கப்பல் அசைந்த போதும் அவர்களது தொழுகை ஏற்றுக் கொள்ளப்படும். மேலும் இந்த ஹதீஸிலிருந்து கிடைக்கும் படிப்பினை என்னவெனில், தரையில் சென்று தொழ முடியுமாக இருந்தும் கப்பலில் தொழுவது ஆகுமானதாகும். ஒருவர் கப்பலில் நின்று தொழுவதற்கு சக்தியிருந்தும் உடகார்ந்து தொழுவது கூடாது. நின்று தொழ முடியாவிட்டால் உட்கார்ந்து தொழலாம். அல்லாஹ் கூறுகின்றான்:



''நீங்கள் உங்களால் இயன்றவரை அல்லாஹ்வை அஞ்சுங்கள்!'' (65:16)

மேலும் அவரது நிலமைக்கு ஏற்றவாறு தொழுது கொள்வார். மேற்கூறப்பட்ட முறைகளான நின்று தொழுதல், இது போன்ற ஏனைய கடமைகளில் தன்னால் முடியுமானதை அவர் செயலாற்றியவ-ராகத் தொழ வேண்டும். இன்னும் அவர்களுக்கு இயன்றவாறு கப்பலில் நின்று தொழ வேண்டும். பர்ழான தொழுகைகளில் கிப்லாவை முன்னோக்க வேண்டும். கப்பல் கிப்லாத்திசையை விட்டும் திரும்பும் போது அவரும் கிப்லாவை நோக்கித் திரும்பி அதனை முன்னோக்கித் தொழ வேண்டும்.

2) பர்ழான தொழுகையை விமனத்தில் தொழுதல்:

ஏனெனில், தண்ணீரின் மீது கப்பல் இருப்பதைப் போன்று ஆகாயத்தில் விமானம் பறக்கின்றது. ஆனால், தொழுகையில் அவனுக்குக் கட்டாயமான அனைத்தையும் செய்வது அவன் மீது கடமையாகும். நின்று தொழுவதுடன் அதன் றுகூன்கள், வாஜிபுகள், நிபந்தனைகளைக் கடைப்பிடித்துத் தொழ வேண்டும். உதாரணமாக:

சுத்தம் செய்தல், கிப்லாவை முன்னோக்குதல், எழுந்து நிற்றல், உட்காருதல், றுகூ∴, ஸுஜூது செய்தல் இது போன்ற கடமைகளைச் செய்தலாகும். மேலும் அவரால் நின்று தொழவும், விமானத்தில் மேற்கூறப்பட்ட விடயங்களை நிறைவேற்றவும் முடியாமல் இருந்தால், அவர் அதிலே தொழாது தரையில் இறங்கும் வரைக்கும் காத்திருக் முடியும். மேலும் அதில் தொழாமல் தாமதிப்பதனால் தொழுகையின் நேரம் சென்றுவிடும் என்றும் அந்தத் தொழுகை அஸர், ∴பஜ்ர் போன்று மற்றைய தொழுகையுடன் சேர்த்துத் தொழவும் முடியாதிருந்தால் அவர் அதனைத் தனித்தனியாக தொழுது கொள்ள வேண்டும். மேலும் அவர்கப்பலில் எவ்வாறு தொழுதாரோ அவ்வாறே விமானத்திலும் தொழ வேண்டும். அவர் நின்று தொழுவதற்கு முடியுமானால் நின்று தொழ வேண்டும். அதற்கு இயலவில்லையெனில் உட்கார்ந்து கிப்லாவை முன்னோக்கியவராகத் தொழுது கொள்ள முடியும். கிப்லாத் திசையை விட்டும் விமானம் திரும்பும் போது அவர் கிப்லாத் திசையின் பக்கம் திரும்பிக் கொள்ள வேண்டும். மேலும் றுகூ∴வையும் ஸுஜூதையும் சமிக்கை



செய்து ஸுஜூதை றுகூ∴வை விட தாழ்த்திக் கொள்ள வேண்டும். மேலும் அவர் தனக்கு இயன்றவற்றை கடைப் பிடித்துக் கொள்ள வேண்டும். ஏனெனில், அல்லாஹ் கூறுகின்றான்:

''நீங்கள் உங்களால் இயன்றவரை அல்லாஹ்வை அஞ்சுங்கள்.'' (64:16)

விமானத்தில் பிரயாணம் செய்யக்கூடிய நேரம் இரு தொழுகைகளை முற்படுத்தி, அல்லது பிற்படுத்தி சேர்த்துத் தொழுவதற்கு முடியுமான நேரமாக இருந்தால் ஒரு முஸ்லிம் அதனை முதல் நேரத்தில் பிரயாணம் செய்வதற்கு முன்பு முற்படுத்தித் தொழுது கொள்ள வேண்டும். உதாரணமாக: ளுஹரையும், அஸறையும் ளுஹர் நேரத்தில் தொழுது கொள்ளுதல், ம∴ரிபையும் இஷாவையும் ம∴ரிப் நேரத்தில் பிரயாணம் செய்வதற்கு முன் தரையில் இருக்கும் போது தொழுது கொள்ள வேண்டும். மேலும் முதற் தொழுகையின் நேரம் வருவதற்கு முன் விமானம், அல்லது புகை வண்டி அல்லது கப்பல் புறப்படல் அவர் தொழுகையை அடுத்த தொழுகையின் நேரம் வரும் வரை பிற்படுத்திக் கொள்ளலாம். இன்னும் அவர் பிரயாணியாக

இருப்பதனால் நான்கு றகஆத் தொழுகைகளை இரண்டாகச் சுருக்கி பிற்படுத்திக் கொள்ளவும் முடியும். பிரயாணம் செய்து கொண்டிருக்கும் போது தொழுகை நேரம் நுழைந்து, விமானம் கீழ் இறங்குவதற்கு முன் அடுத்த தொழுகையின் நேரமும் சென்று விடும் என்று அறிந்தால் அவர் அதன் நேரம் செல்வதற்கு முன் தனக்கு இயன்றவிதத்தில் தொழுது கொள்ள வேண்டும்.

3) வாகனங்களில் தொழும் முறை பின்வருமாறு.

அ) சவாரி செய்யும் வாகனம் பெரிதாகவும், விசாலமாகவும், பர்ழான தொழுகைகளை நின்றவராகவும், றுகூ:. ஸுஜூது செய்தவராகவும், கிப்லாவை முன்னோக்கியவராகவும் தொழ முடியுமாயின் அவர் வுழூச் செய்து தொழுது கொள்ள வேண்டும். கப்பல் விமானம், புகைவண்டி, ஆகியவைகளில் தொழுவது போல் இதில் தொழுவதில் எக்குற்றமும் இல்லை.

ஆ) அவர் பர்ழான தொழுகையில் நிறைவேற்ற வேண்டிய கடமைகளைச் செய்வதற்தகு சக்தியற்றவராக இருந்தால் அவர் வாகனத்தில் தொழாது தரையில் தொழ வேண்டும். மேலும் பிரயாணம் செய்பவரால் கீழ் இறங்க



முடியவில்லை. தொழுகையின் நேரம் சென்று விடும் என்ற பயம் ஏற்பட்டால் அவ்வேளை மேற்கூறப்பட்டவாறு அவர் இருக்கும் நிலையில் தொழுது கொள்ளலாம்.

இ) பிராணிகளில் ஒட்டகம், குதிரை, கழுதை இது போன்றவைகளில் பிரயாணம் செய்யும் சமயத்தில் தொழுவதாகும். இவைகளில் மீது அமர்ந்து தொழுவது என்பது ஒருவர் மழையின் காரணமாக அல்லது பூமியில் தண்ணீர் தேங்கி இருப்பதன் காரணமாக தரையில் சரியான முறையில் தொழுவதற்கு முடியவில்லையென்ற அச்ச நிலை ஏற்படும் போது அவர் பிராணியின் மீது அமர்ந்து தொழுது கொள்ளலாம். அவர் தொழுகின்ற வேளை கிப்லாவை முன்னோ-க்குவதுடன் தன்னால் இயன்றவற்றை செய்து கொள்ள வேண்டும். அவ்வாறே ஒருவர் கீழ் இறங்கித் தொழுவதன் காரணமாக பிரயாணத்தில் அவரோடு வந்தவர்கள் அவரைத் தனிமையில் விட்டுவிட்டுச் செல்வார்கள், அல்லது எதிரிகள் தாக்கிவிடுவார்கள், அல்லது கீழே இறங்கிவிட்டால் திரும்பவும் அதன் மேல் ஏறுவதற்கு முடியாது என்று பயப்படக் கூடியவர்

அதன்மீது அமர்ந்தவராக பர்ழான தொழுகைகளைத் தொழுது கொள்ள முடியும்.

மேலும் அவரால் கிப்லாவை முன்னோக்குவதற்கு முடியுமாயின் அதனை முன்னோக்கித் தொழ வேண்டும். றுகூஃவையும் ஸுஜூதையும் செய்து கொள்ள வேண்டும். றுகூஃவை விட ஸுஜூதைத் தாழ்த்திக் கொள்ள வேண்டும். அல்லாஹ் கூறுகின்றான்:

''நீங்கள் உங்களால் இயன்றவரை அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்'' (64:16)

மேலும் கூறுகையில்: ''அல்லாஹ் எந்தவோர் ஆத்மாவுக்கும் அதன் சக்திக்குட்பட்டதைத் தவிர சிரமம் கொடுப்பதில்லை.

4) நஃபிலான தொழுகைகளைப் பொறுத்த வரை அவைகளை எல்லாவகையான போக்குவரத்து வாகனங்களிலும் தொழுது கொள்ள முடியும். கப்பல், ஆகாய விமானம், ஏனைய வாகனங்கள் பிராணிகள் ஆகிய அனைத்திலும் தொழுது கொள்ளலாம். ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் ஏறிச் செல்லும் பிராணியின் மீது அமர்ந்தவர்களாக அது செல்லும் திசையில் நஃபிலான தொழுகைகளை தொழுபவர்களாக



இருந்தார்கள்.

மேலும் இப்னு உமர் (றழி) அவர்கள்: 'நபி (ஸல்) அவர்கள் பிரணியின் மீது அமர்ந்தவர்களாக வித்றுத் தொழுகையைத் தொழுவதைக் கண்டார்கள். (புஹாரி:999, முஸ்லிம்: 700)

ஒருவர் பிராணியின் மீது அமர்ந்து தொழும் போது தக்பீறதுல் இஹ்றாமை கிப்லாவை முன்னோக்கிச் சொல்வது சிறந்ததாகும். பிறகு கப்பல், அல்லது விமானம் அல்லது பிராணி இது போன்றவைகள் எத்திசையை நோக்கிச் சென்றாலும் அவர் அத்திசையிலே தொழுது கொள்ள முடியும். நஃபிலான தொழுகையின் போது அவர் முதற் தக்பீரில் கிப்லாவை முன்னோக்க முடியவில்லை என்பதற்காக எவ்விதக் குற்றமும் இல்லை. எனினும், அதனை முன்னோக்கித் தொழுவது விரும்பத் தக்கதாகும். அல்லாஹ் யாவற்றையும் நன்கு அறிந்தவன், ஞானம் மிக்கவன், தூய்மையானவன், உயர்வானவனாவான்.

மேலும் எங்கள் நபி முஹம்மது (ஸல்) அவர்கள் மீதும் அவர்களது குடும்பத்தவர்கள், தோழர்கள், அவர்களை மறுமை நாள் வரை பின்பற்றக் கூடிய நல்லவர்கள் அனைவர் மீதும் அல்லாஹ் சாந்தியும் சமாதானமும் என்றென்றும் சொரிவானாக.